உ

# ஸ்ரீமத் ஸ்ரீகண்ட சிவாச்சார்ய வேதசிவாகம வித்யாபீடம்

## ஸம்ஸ்க்ருத விகாஸ கேந்த்ரம்

(ஸ்ரீமத் ஸ்ரீகண்ட சிவாசார்ய டிரஸ்டால் நடத்தப்படுகிறது)

காரைக்கால் – 609 605.

**வித்யாபீடத்தில் சேர்ந்து வேதசிவாகம ஸம்ஸ்க்ருதம் பயில ஆதிசைவ சிவாசார்ய வித்யார்த்திகள் வரவேற்கப்படுகின்றனர்**

**போதிக்கப்படும் பாடங்கள் :**

1. வேதம், 2. ஆகமம், 3. ஸம்ஸ்க்ருதம், 4. சில்பம்
5. தமிழ்த்திருமுறை – சைவசித்தாந்தம், 6. ஜ்யோதிஷம்,

மேலும் பொதுகல்விக் கூடத்தில் 6–ஆம் வகுப்பு முதல் 10 வகுப்பு (S.S.L.C.) வரை கல்வி கற்க அனுமதிக்கப்படுகிறார்கள்.

பள்ளியில் பயில விரும்பும் மற்றும் வித்யாபீடத்தில் மட்டும் பயில விரும்பும் வித்யார்த்திகள் பிரதி ஆண்டு மே மாதம் 10 முதல் 15 தேதிக்குள் நேர்முக தேர்வில் கலந்துகொள்ள வேண்டும்.

★ வித்யார்த்திக்கு உபநயனம் ஆகியிருக்க வேண்டும்.

★ வித்யார்த்தியின் வயது வரம்பு 11 முதல் 13 வரை

★ வித்யா பீடத்தின் போதனா காலம் (6) ஆறு ஆண்டுகள்.

★ தட்டச்சு, கணினி (கம்ப்யூட்டர்) ஆகிய பயிற்சிகள் அளிக்கப்படுகிறது.

★ யோகா மற்றும் உடற்பயிற்சி அளிக்கப்படுகிறது.

★ ஆறு ஆண்டுகள் முழுவதும் பயின்று தேர்ச்சிப்பெற்ற மாணவனுக்கு "வேதசிவாகம பண்டித ப்ரவர" என்ற பட்டையம் அளிக்கப்படுகிறது.

★ உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க இடம், கல்வி கட்டணம் அனைத்தும் இலவசம்.

★ பொறுப்புத் தொகை ரூ. 3,000/– மாணவனை சேர்க்கும் அன்றைய தினம் செலுத்தவேண்டும். இத்தொகை போதனாகாலம் (6 ஆண்டுகள்) பூர்த்தி செய்யும் வித்யார்த்திக்கு திருப்பித்தரப்படும். இடையில் விலகிக்கொள்ளும் மாணவர்களுக்குப் பொறுப்புத் தொகை திருப்பித் தரப்படமாட்டாது. இத்தொகை மேற்படி டிரஸ்ட்டில் சேர்க்கப்பட்டுவிடும்.

★ தனியார்ப் பள்ளியில் சேர்க்க நேர்ந்தால் அப்பள்ளியின் கல்வி கட்டணம் அனைத்தையும் வித்யாத்திகளின் பெற்றோர்களே செலுத்த வேண்டும்.

அணுக வேண்டிய முகவரி


சிவாகம ஞானபானு, ஸாஹித்ய சிரோமணி

**சிவஸ்ரீ. பால. ஸர்வேச்வர குருக்கள்,** M.A., M.Phil.,

முதல்வர், ஸ்ரீமத் ஸ்ரீகண்ட சிவாசார்ய வேதசிவாகம வித்யாபீடம்

11, நித்தீஸ்வரம் அக்ரஹாரம், கோவில்பத்து, காரைக்கால் – 609 605.

✆ : (04368) 26644

சிவமயம்







ஸ்காந்த மஹாபுராணம் சங்கரஸம்ஹிதை
ஹாலாஸ்ய மாஹாத்ம்யத்திலடங்கிய

## ஸ்ரீ ஹாலாஸ்யேசாஷ்டகம்

## ॥ श्रीहालास्येशाष्टकम् ॥

शैलाधीशसुतासहाय सकलाम्नायान्तवेद्य प्रभो
शूलोग्राग्रविदारितान्धक सुरारातीन्द्रवक्षस्थल ।
कालातीत कलाविलासकुशल त्रायेत ते सन्ततं
हालास्येश कृपाकटाक्षलहरी मामापदामास्पदम् ॥ १ ॥

சைலாதீச ஸுதாஸஹாய ஸகலாம்நாயாந்த வேத்யப்ரபோ
சூலோக்ராக்ரவிதாரிதாந்தக ஸுராராதீந்த்ர வக்ஷஸ்தல
காலாதீத கலாவிலாஸ குசல த்ராயேத தே ஸந்ததம்
ஹாலாஸ்யேச க்ருபாகடாக்ஷ லஹரீ மாமாபதாமாஸ்பதம்

மலையரசனின் மகளான உமையோடு கூடியவரே வேதசாஸ்திரங்களால் அறியப்படுகிற பிரபுவே, தேவர்களின் வைரியான அந்தகன் என்னும் அரக்கனைப் பிளந்த கூர்மையான சூலத்தை உடையவரே. காலத்தை வென்று கலையைப் பரப்புகிறவரே, மதுரை மாநகரில் கோயில் கொண்டுள்ளவரே உன் கருணையாகிற வெள்ளப்பெருக்குடைய உன் கண்கள் ஆபத்திற்கெல்லாம் இருப்பிடமாயிருக்கும் என்னை எப்பொழுதும் காப்பாற்றட்டும்.

कोलाच्छच्छदरूप माधव सुरज्येष्ठादिदूराङ्घ्रिक-
नीलार्धाङ्ग निवेश निर्झरधुनी भास्वज्जटामण्डल ।
कैलासाचलवास कामदहन त्रायेत ते सन्ततं
हालास्येश कृपाकटाक्षलहरीमामापदामास्पदम् ॥ २ ॥

கோலாச்சச்சதரூப மாதவ ஸுரஜ்யேஷ்டாதி தூராங்க்ரிக
நீலார்த்தாங்க நிவேச நிர்ஜரதுநீ பாஸ்வஜ்ஜடாமண்டல!
கைலாஸாசலவாஸ காமதஹந த்ராயேத தே ஸந்ததம்
ஹாலாஸ்யேச க்ருபாகடாக்ஷலஹரீ மாமாபதாமாஸ்பதம்!!

வெண்மையான பற்களைக் கொண்ட பன்றி உருவான லக்ஷ்மியின் கணவரான திருமால், நான்முகன் முதலியவர்களாலும் அடையமுடியாத திருவடிகளை உடையவரே, உமையைப் பாதி உடலாய்க் கொண்டவரே, தேவநதியான கங்கையை முடியில் கொண்டவரே, கயிலை மலையில் வசிப்பவரே; காமனை எரித்தவரே, மதுரையம்பதியில் உறைகிறவரே. கருணைவெள்ளப் பெருக்குடைய உன் கண்கள், ஆபத்திற்கிடமாயிருக்கும் என்னை எப்பொழுதும் காப்பாற்றட்டும்.

फालाक्षिप्रभवप्रभञ्जनसखप्रोद्यत्स्फुलिङ्गच्छटा
तूलानङ्गकचारुसंहनन सन्मीनेक्षणावल्लभ ।
शैलादप्रमुखैर्गणैः स्तुतगुण त्रायेत ते सन्ततं
हालास्येश कृपाकटाक्षलहरी मामापदामास्पदम् ॥ ३ ॥

பாலாக்ஷிப்ரபவ ப்ரபஞ்ஜநஸக ப்ரோத்யத்ஸ்புலிங்கச்சடா
தூலாநங்கக சாருஸம்ஹநந ஸந்மீநேக்ஷணாவல்லப!
சைலாதப்ரமுகைர்கணை:ஸ்துதகுண த்ராயேத தே ஸந்ததம்
ஹாலாஸ்யேச க்ருபாகடாக்ஷலஹரீ மாமாபதாமாஸ்பதம்!!

நெற்றிக் கண்ணிலிருந்து உண்டான அக்னி ஜ்வாலையினால் காமனை எரித்தவரே மீனாக்ஷியின் நாய்கனும் நந்திகேச்வரர் முதலியவர்களால் துதிக்கப்பட்ட குணங்களையுடைய ஹாலாஸ்ய நாதரே, உன் கண் பார்வையின் கருணை வெள்ளம் ஆபத்து நிறைந்த என்னை எப்பொழுதும் காப்பாற்றட்டும்.

मालाकल्पितमालुधानफणसन्माणिक्यभास्वत्तनो
मूलाधार जगत्त्रयस्य मुरजिन्नेत्रारविन्दार्चित ।
सालाकारभुजासहस्रगिरिश त्रायेत ते सन्ततं
हालास्येश कृपाकटाक्षलहरी मामापदामास्पदम् ॥ ४ ॥

மாலாகல்பித மாலுதாநபணாஸன் மாணிக்ய பாஸ்வத்தநோ
மூலாதார ஜகத்ரயஸ்ய முரஜித் நேத்ராரவிந்தார்ச்சித!
ஸாலாகார புஜா ஸஹஸ்ரகிரிச த்ராயேத தே ஸந்ததம்
ஹாலாஸ்யேச க்ருபாகடாக்ஷலஹரீ மாமாபதாமாஸ்பதம்!!

ஒளிவிடுகிற ரத்னங்களைத் தலையில் கொண்ட பாம்புகளை மாலையாகக் கொண்ட உடலையுடையவரே. மூவுலகிற்கும் ஆதாரமானவரே, முரன் என்னும் அரக்கனையழித்த திருமாலின் கண்ணாகிற தாமரையால் பூஜிக்கப்பட்டவரே, தேக்கு மரத்திற்கு ஒப்பான ஆயிரக்கணக்கான கைகளையுடைய மதுரை நாயகனான உன் திருவிழிகளின் கருணை வெள்ளம் என்னை எப்பொழுதும் காப்பாற்றட்டும்.

बालादित्यसहस्रकोटि सदृशोत्पद्वेगवत्यापगा
वेलाभूमिविहारनिष्ठ विबुधस्रोतस्विनीशेखर ।
बालावर्ण्यकवित्व भूमिसुखद त्रायेत ते सन्ततं
हालास्येशकृपा कटाक्षलहरीमामापदामास्पदम् ॥ ५ ॥

பாலாதித்ய ஸஹஸ்ரகோடி ஸத்ருசோத்பத்வேகவத்யாபகா
வேலாபூமி விஹாரநிஷ்ட விபுதஸ்ரோதஸ்வி நீசேகர!
பாலாவர்ண்ய கவித்வ பூமிஸுகத த்ராயேவ தே ஸந்ததம்
ஹாலாஸ்யேச க்ருபாகடாக்ஷலஹரீ மாமாபதாமாஸ்பதம்!!

ஆயிரக்கணக்கான இளம் சூரியர்களின் ஒளிக்கொப்பானவரும், வைகை நதிக்கரையில் விளையாடும் வரும், தேவநதியான கங்கையை முடியில் கொண்ட வரும், வர்ணிக்க முடியாத கவிதா சக்தியைக் கொடுக்கிற ஹாலாஸ்யக்ஷேத்ரதலைவருமான உன்கண்களின் கருணை வெள்ளம், ஆபத்து நிறைந்த என்னை எப்பொழுதும் காப்பாற்றட்டும்.

कीलालावनिपावकानिलनभश्चन्द्रार्कयज्वाकृते
कीलानेकसहस्रसंकुलशिखिस्तम्भ स्वरूपामित ।
चोलादीष्टगृहाङ्गनाविभवद त्रायेत वै सन्ततं
हालास्येश कृपाकटाक्षलहरी मामापदामास्पदम् ॥ ६.

கீலாலாவநிபாவகாநில நபச் சந்த்ரார்க யஜ்வாக்ருதே
கீலாநேக ஸஹஸ்ரஸங்குலசிகி ஸ்தம்ப ஸ்வரூபாமித!
சோளாதீஷ்ட க்ருஹாங்கநாவிபவத த்ராயேத தே ஸந்ததம்
ஹாலாஸ்யேச க்ருபாகடாக்ஷலஹரீ மாமாபதாமாஸ்பதம்!!

ஜலம், பூமி, அக்நி, காற்று, ஆகாயம், சந்திரன், சூரியன், யஜமானன் ஆகிய எட்டு உருவானவரும், பிரளயகால ருத்ரனின் உருவானவரும், க்ருஹ ஸ்த்ரீகளுக்கு செல்வதைக் கொடுப்பவரும், மதுரை மாநகரில் உள்ளவருமான இறைவரே! உன் கண்விழிக் கருணை ஆபத்து நிறைந்த என்னைக்காப்பதாக ஆகட்டும்.

लीलार्थाञ्जलिकेन चरतां साम्राज्यलक्ष्मीप्रद-
स्थूणाशेष चराचरात्मकजगत्स्थूणाष्टमूर्ते गुरो ।
दानाम्भस्तुष फल्गुनप्रियकर त्रायेत वै सन्ततं
हालास्येश कृपाकटाक्षलहरी मामापदामास्पदम् ॥ ७ ॥

லீலார்த்தாஞ்ஜலிகமேவ சரதாம் ஸாம்ராஜ்ய லக்ஷ்மீப்ரத
ஸ்தூணாசேஷ சராசராத்மக ஜகத் ஸ்தூணாஷ்ட மூர்த்தே குரோ!
தானாம்பஸ்துஷ பல்குன ப்ரியகர த்ராயேத தே ஸந்ததம்
ஹாலாஸ்யேச க்ருபாகடாக்ஷலஹரீ மாமாபதாமாஸ்பதம்!!

விளையாட்டாகவே கைகூப்பி வணங்கியவர்களுக்குப் பெரிய ராஜ்ய லக்ஷ்மியைக் கொடுப்பவரே, அசைவதும் அசையாததுமான எல்லா உலகையும் நிறைந்து எட்டு உருவாய் விளங்குபவரே, அர்ஜுனனுக்கு அருள் புரிந்தவரே, மதுரை மாநகரில் உறையும் கடவுளே, ஆபத்து நிறைந்த என்னை உன் கண்களின் கருணை வெள்ளம் எப்பொழுதும் காப்பாற்றட்டும்.

हालास्यागत दैवदैत्यमुनिभिर्गीतापदानक्वण-
लीलाकोटिमनोहराङ्घ्रिकमलानन्दापवर्गप्रद ।
श्रीलीलाकरपद्मनाभवरद त्रायेत ते सन्ततं
हालास्येश कृपाकटाक्षलहरी मामापदामास्पदम् ॥

ஹாலாஸ்யாகத தேவதைத்யமுநிபிர் கீதாபதாநக்வணல்
லீலாகோடி மனோஹராங்க்ரி கமலாநந்தாபவர்கப்ரத
ஸ்ரீலீலாகர பத்மநாபவரத த்ராயேத தே ஸந்ததம்
ஹாலாஸ்யேச க்ருபாகடாக்ஷலஹரீ மாமாபதாமாஸ்பதம்॥

மதுரை மாநகருக்கு வந்த தேவர், அரக்கர், முனிவர்களால் பாடப்பட்ட கதைகளால் திருவிளையாடல்களைக் கொண்டு திருவடித் தாமரைகளாலேயே, ஆனந்தம் மோக்ஷத்தையும் கொடுப்பவரே, லக்ஷ்மியின் இருப்பிடமான திருமாலுக்கு அருள் புரிபவரே, மதுரை மாநகர் உறைபவரே, [illegible] நிறைந்த என்னை உன் திருவிழிகளின் கருணைவெள்ளம் எப்பொழுதும் காப்பாற்றட்டும்.

लीलानादर मोहतः कपटतो यद्वा कदम्बाटवी
हालास्याधिपतीष्टमष्टकमिदं सर्वेष्टसन्दोहनम् ।
आलापानफलान् विहाय सततं सङ्कीर्तयन्तीह ते
तेलाक्षार्द्रपदाब्जलाभिरखिलान् भोगान् लभन्ते सदा ॥

லீலாநாதர மோஹத: கபடதோ யத்வா கதம்பாடவீ
ஹாலாஸ்யாதிபதீஷ்டமஷ்டகமிதம் ஸர்வேஷ்டஸந்தோஹநம்
ஆலாபாநபலாந் விஹாய ஸததம் ஸங்கீர்த்தயந்தீஹதே
தேலாக்ஷார்த்ர பதாப்லாபிரகிலாந் போகாந் லபந்தே ஸதா॥

விளையாட்டாகவோ ஆதரவில்லாமலோ, கபடமாகவோ எப்படியாவது கதம்ப வனத்தில் உள்ள மதுரைமாநகர் உறையும் ஈசனின் இந்த எட்டு சுலோகங்கள் எல்லா இஷ்டத்தையும் கொடுப்பதை பிரயோஜனமில்லாத பேச்சுக்களை விட்டு எவன் இங்கு பாடுகிறானோ அவன் எல்லா போகங்களையும் ஒருங்கே அடைவான்.

குறிப்பு :- ஹாலாஸ்ய மாஹாத்மியத்தில் குண்டோதரன் செய்ததாக சொல்லப்படுகிற இத்துதி மிக அரிய கருத்துக்களைக் கொண்டு விளங்குகிறது. இதைப் பக்தியுடன் படித்து மீனாக்ஷி ஸமேதனான ஸ்ரீஸுந்தரேசப் பெருமானின் அருளை அடையலாம்.

# தமிழன் என்று கூறிக்கொண்டு தமிழ்தாயை இழிவுபடுத்தலாமா?

- காரை. ஸுமன்.

இந்துக்களின் இறை நம்பிக்கையை இழிவு படுத்தும் ஆய்வுக் கட்டுரை பாண்டிச்சேரி பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறையில் நடந்துவரும் சதிகாரச்செயல்ஒன்று இப்போது அம்பலமாகியுள்ளது. பீ.எச்.டி. (டாக்டர்) பட்டம் பெறுவதற்கான ஆய்வுக் கட்டுரை என்ற பெயரில் இது நடந்துள்ளது.

நலங்கிள்ளி என்ற ஒருவர் புதுவைப்பல்கலைக் கழகத்தமிழ்த்துறையில் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். அவரது வழிகாட்டுதலில் இளங்கோ என்ற ஒருவர் பீ.எச்.டி. பட்டம் பெறுவதற்காகத் தமிழிலக்கிய ஆய்வு செய்துள்ளார். அவரது ஆய்வின் தலைப்பு - பிராய்டின் அணுகுமுறையில் பெரியபுராணம். இளங்கோ புதுவை பாரதிதாசன் மகளிர் கல்லூரியில் தினதற்காலிக விரிவுரையாளராகப் பணியாற்றி வருகிறார்.

இந்த இளங்கோ தனது ஆய்வுக் கட்டுரையில், பெரியபுராணத்தில் வரும் சிவனடியார்களான நாயன்மார்களைக் கற்பனைக்கு எட்டாத அளவுக்கு இழிவு படுத்தியுள்ளார். அவர் நிறுவ விரும்பும் கருத்து "பக்தி என்பது பாலுணர்வின் ஒருவகையே" என்பது தெளிவாகிறது. சிவனடியார்கள் சிவனின் மனைவியாகிய அன்னை பார்வதியிடம் செக்ஸ் (பாலுணர்வை) அனுபவிப்பதாகவும், பெண்பால் சிவனடியாராகிய காரைக்காலம்மையார் சிவனிடம் காம இச்சையைப் பூர்த்தி செய்து கொள்வதாகவும் அந்த ஆய்வுக் கட்டுரையில் அவர் குறிப்பிட்டுள்ளார். காரைக்கால் அம்மையார் சிவனுக்குப் படைத்தது மாங்கனி அல்ல, தனது மார்பகங்களையே என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இந்த செய்திகள் "மாலை பூமி", "தெளிதமிழ்" போன்ற புதுவைப் பத்திரிகைகளிலும் வெளி வந்துள்ளன.

மேலும் சில நாயன்மார்களையும் இதேபோல் மிகவும் தரக்குறைவாக விமரிசித்துள்ளார். ஆமாம், ஃபீரூடியன் அணுகு முறை என்பது தான் என்ன? அந்த அணுகுமுறையில் உலக வரலாற்றில் உள்ள அத்தனை மகான்களையும் (அவர்கள் எந்த சமயத்தைச் சார்ந்தவராயினும்) ஞானிகளையும் தூயதுறவியரையும் கற்பனைக் கெட்டாத அளவு இழிவு படுத்திவிட முடியும் போலிருக்கிறதே? அப்படியானால் உலகில் ஒருவருமே மகான்

அல்ல, அனைவருமே தரம் கெட்டவர்கள்தான், என்றல்லவா ஆகிறது? இப்படியொரு ஆய்வா? இது எந்தவகையில் தமிழிலக்கியத்திறனாய்வுக்கு வலுவூட்டும்? என்றெல்லாம் இந்துக்கள் சிந்திக்கத் தொடங்கிவிட்டனர். விளைவு? காரைக்கால் மற்றும் பாண்டிச்சேரி பகுதியிலுள்ள இந்து இயக்கங்கள் அனைத்தும் புதுவை துணை நிலை ஆளுனரையும், முதல்வரையும், கல்வி அமைச்சரையும் 22.04.2003 அன்று சந்தித்து மகஜர் (மனு) கொடுத்துள்ளனர். துண்டுப்பிரசுரங்களும், சுவரொட்டிகளும் விளம்பரப் படுத்தப்பட்டுள்ளன.

இளங்கோவைக் கைது செய்து தண்டனை அளிக்க வேண்டும் என்ற கோரிக்கை இந்து இயக்கங்களால் அரசின் முன் வைக்கப்பட்டுள்ளது. தமிழில் பக்தி இலக்கியங்களில் பன்னிரு திருமுறைகளில் ஒன்றாகிய பெரிய புராணமும் அதில்வரும் சிவனடியார்களின் வரலாறுகளும் திட்டமிட்டு இழிவு படுத்தப்பட்டுள்ளன. இத்தனைக்கும் மூலகாரணம் நலங்கிள்ளி என்ற அவரது (வழிகாட்டி) தான் - அவர் 1992 லேயே இந்துக் கடவுளக்களான சிவன், விநாயகர், முருகன் போன்றோரை இழிவுபடுத்திப் புத்தகம் வெளியிட்டு உள்ளதாகத் தெரிகிறது. புதுவை மற்றும் காரைக்கால் பகுதி இந்துக்கள் வன்மையாகக் கண்டித்துக் குரல் எழுப்பியுள்ளனர்.

இது நாத்திக வாதிகளின் மற்றொரு முகமா? அல்லது நாத்திக வாதிகளின் ஏஜன்ட்டுகளாகச் செயல்படும் கைக்கூலிகளின் சதிகாரச் செயலா? இதை நீடிக்கவிட்டால் விளைவு என்ன ஆகும்? இது இப்படியே தொடர்ந்தால் மற்ற தமிழிலக்கியங்களில் வரும் கதா பாத்திரங்களையும், கற்பு கரசி கண்ணகியையும் கூடக் கற்பனைக் கெட்டாத அளவுக்கு இழிவுபடுத்தி விடமுடியுமே? இந்த ஆய்வுக் கட்டுரையை ஓர் இலக்கியச் சான்றாக வைத்து கயவர்கள் கூட்டம் இந்து கலாச்சாரத்தை எந்த அளவுக்கு வேண்டுமானாலும் இழிவுபடுத்த வழிவகுத்துவிடுமே?

ஆத்திகத்தை (கடவுள் நம்பிக்கையை)-யும் ஆன்மீகத்தையும் இழிவுபடுத்தும் இந்த முயற்சி வேருடன் களையப்பட வேண்டும். இதுபோன்ற ஆய்வுகளுக்கு எந்த பல்கலைக்கழகமும் அனுமதி அளிக்கக் கூடாது. கடவுள் நம்பிக்கையுள்ளவர்கள் சமய வேறுபாடின்றி இந்த நாத்திக வாத முயற்சியை முறியடிக்க வேண்டும். இதுவே இந்துக்களின் கோரிக்கையுமாகும்.

# திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டோமோ

*- பாரதி அடிபொடி.*

இறைவனை வழிபடும் முறைகளில் அவனது பல பெயர்களையும் தொகுத்துக் கூறுவதான அர்ச்சனை என்பதும் ஒன்று. பெயரோ உருவமோ குணமோ இல்லாத இறைவனுக்குப் பல உருவங்களைப் படைத்து, பல நற்குணங்களின் இருப்பிடமாக அவனை உருவகித்து அதன் அடிப்படையில் அவனுக்குப் பல பெயர் கொடுத்து வணங்குவோம் என்கிறது திருவாசகம்.

> "ஒரு நாமம் ஓருவம் ஒன்றுமில்லார்க்கு ஆயிரம்
> திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ"

இந்த அர்ச்சனை முறை எப்படி ஏற்பட்டது என்று அதன் வேரைத் தேடிக் கொண்டு போனபோது, சங்க நூலாகிய திருமுருகாற்றுப்படையில் இருந்த ஒரு பகுதி கவனத்தை ஈர்த்தது. (அதற்கும் முற்பட்ட காலத்தான வேதத்திலேயே இறைவனின் பல பெயர்களை அடுக்கிக் கூறும் முறை இருக்கிறது. இங்கு கூறப்படுவது தமிழ் இலக்கியத்தில் உள்ள குறிப்புகளைப் பொறுத்து மட்டுமே.)

துன்பப்பட்டுத் தன்னிடம் வந்த ஒருவனுக்கு நக்கீரர் வழிகாட்டுகிறார். முருகன் இந்த இடங்களில் உறைகிறான். அவற்றில் ஏதேனும் ஒன்றுக்கு நீ செல்க. அங்கு நின்று "இனியவும் நல்லவுமாக" பல சொல்லி அவனை ஏத்துக. அவ்வாறு ஏத்தினால் அவன் உனக்கு அபயம் அளித்து நீ கேட்கும் முன்னே உன் விருப்பத்தை நிறைவேற்றுவான் என்கிறார். இனியவும் நல்லவுமான அந்த சொற்கள் என்ன? நக்கீரர் வாயாலேயே கூறக் கேட்போம்.

> நெடும் பெரும் சிமயத்து நீலப் பைஞ்சுனை
> ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப
> அறுவர் பயந்த ஆளமர் செல்வ (1)
>
> ஆல்கெழு கடவுட் புதல்வ (2) மால்வரை
> மலை மகள் மகனே (3) மாற்றோர் கூற்றே (4)
> வெற்றிவேல் போர்க் கொற்றவை சிறுவ (5)
> இழையணி சிறப்பிற் பழையோள் குழவி (6)
> வானோர் வணங்குவில் தானைத் தலைவ (7)
> மாலை மார்ப (8) நூலறி புலவ (9)
> செருவில் ஒருவ (10) பொருவிறல் மள்ள (11)
> அந்தணர் வெறுக்கை (12) அறிந்தோர் சொல்மலை (13)
> மங்கையர் கணவ (14) மைந்தர் ஏறே (15)
> வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ (16)
> குன்றம் கொன்ற (17) குன்றாக் கொற்றத்து (18)
> விண் பொருநெடுவரை குறிஞ்சிக் கிழவ (19)
> பலர் புகழ் நன்மொழிப் புலவர் ஏறே (20)
> அரும்பெறல் மரபின் பெரும் பெயர் முருக (21)

நசையுனர்க்கு ஆர்த்தும் இசை பேராள (22)
அலந்தோர்க்கு அளிக்கும் (23) பொலம் பூட் சே எய்
மண்டமர் கடந்த நின் வென்றாட கலத்து (24)
பரிசிலர்த்தாங்கும் உருகெழு நெடுவேள் (25)
பெரியோர் ஏத்தும் பெரும் பெயர் இயவுள் (26)
சூர்மருங்கறுத்த மொய்ம்பின் மதவலி (27)
போர்மிகு பொருந (28) குரிசில் (29)

## இதன் பொருளையும் பார்ப்போம்

1. அக்னியால் எடுத்துச் செல்லப்பட்டு, கார்த்திகைப் பெண்டிர் அறுவரால் வளர்க்கப்பட்டவனே.
2. ஆலின் கீழிருந்து அறம் உரைக்கும் கடவுளின் மகனே.
3. மலைமகள் மகனே.
4. எதிரிகளின் யமனே.
5. வெற்றி கொள்ளும் துர்க்கையின் குமாரனே.
6. வனதுர்க்கையின் புதல்வனே.
7. தேவர் வணங்கும் சேனாபதியே.
8. மாலை அணிந்த மார்பினனே.
9. நூல் பல அறிந்த புலவனே.
10. போர்க்களத்தில் ஒப்பற்றவனே.
11. வீரம் கொண்ட இளைஞனே.
12. அந்தணர்களின் செல்வமே.
13. சான்றோர் புகழும் சொற்களின் கூட்டமே.
14. வள்ளி, தெய்வயானை மணாளா.
15. வீரர்களில் ரிஷபம் போன்றவனே.
16. வேல் கை என்னும் செல்வம் உடையவனே.
17. குன்றமாகி நின்ற சூரனைக் கொன்றவனே.
18. குறையாத வெற்றி உடையவனே.
19. பெரிய மலைகளின் உரிமையாளனே.
20. பலராலும் புகழப்படும் புலவர் தலைவா.
21. பெறற்கு அரிய பெரும் பொருளுடைய முருகா.
22. அந்தப் பொருளை விரும்பிவந்தோர்க்கு அதை நுகர்விப்பவனே.
23. துன்புற்று வந்தோர்க்கு அருள்புரிபவனே.
24. அகன்ற மார்பில் பொன் அணி அணிந்த குழந்தாய்.
25. இரப்பவரைக் காப்பாற்றும் நெடிய வேளே.
26. பெரியோரால் ஏத்தப்படும் தலைவா.
27. சூரன் குலமறுத்த வலிமையே.
28. போர்த் தொழில் வல்லோனே.
29. தலைவனே

இவ்வனவும் சொல்லிவிட்டு நக்கீரர் அடக்கத்தோடு தன் சிறுமையையும் ஒப்புக்கொள்கிறார் "இறைவா உன் புகழை அளவிடுதல் என் போன்றோர்க்கு அரிது எனவே உன் திருவடியை நினைப்பது ஒன்றே என்னால் முடிந்த செயல்" என்கிறார்

# கும்பாபிஷேகக் கிரியைகள்

- டாக்டர். சிவஸ்ரீ. டி. ஸோமசுந்தர சிவாசாரியார்
முதல்வர் ஸ்ரீ லோகாம்பிகா வேதசிவாகம வித்யாலயம், திருபாளைவனம்.

கும்பாபிஷேகக் கிரியைகள் ஏறத்தாழ 55 உள்ளன. அவை வருமாறு:

1 முகூர்த்த நிர்ணயம் (நாள் குறித்தல்).

2. தனபூஜை (கும்பாபிஷேகத் திற்குத் தேவையான பணத்தைச் சேகரித்துப் பூஜை செய்து வைத்துக் கொள்ளுதல்)

3. திரவ்யவிபாகம் (எது எதற்கு எவ்வளவு செலவு என்பதை திட்டமிடல்)

4. ஆசாரிய அனுக்ஞை (கும்பாபிஷேகம் செய்யப்போகும் சிவாசாரியரை நியமித்து அவரிடம் நல்வாக்கு பெறுதல்)

5. ஆசாரிய வரணம் (தேவைப் படும் சிவாசாரியப் பெருமக்களை நியமித்துக் கொள்ளுதல்)

6. ஆசாரியவபனம் (ஆசாரியர்கள் சிகை முதலியவற்றைத் திருத்தி அமைத்துக் கொள்ளுதல்)

7. ஆசாரிய அலங்காரம் (சிவாசாரியர்களுக்கு வஸ்த்ரம், ருத்ராட்சம், விபூதிப்பை, தட்சிணை ஸ்வர்ணகங்கணம், உஷ்ணீஷம் எனப்படும் சிகாவஸ்திரம் அனைத்தையும் அளித்து அவரைப் பஞ்சாங்கபூஷணராய் இருக்கச் செய்தல்)

8. விக்னேஸ்வர பூஜை மற்றும் அனுக்ஞை (விநாயகரிடம் முதலில் உத்தரவு பெறுதல்)

9. தட்சிணாமூர்த்தி அனுக்ஞை (தட்சிணாமூர்த்தியிடம் அனுமதி கோரல்)

10. பின்பு சுப்ரமண்யர், சிவபிரான், பார்வதி, நந்திகேசர், சண்டேஸ்வரர் வரை அனுக்ஞை பெறுதல்.

11. வாஸ்து பூஜை (வாஸ்து சாந்திக்காக வாஸ்து பூஜை செய்தல், ஹோமம் செய்தல்) மற்றும் கிராம சாந்தி, பிரவேச பலி, ரக்ஷோக்ன ஹோமம் செய்தல் வேண்டும்)

12. மிருத்சங்கிரஹணம்

13. அங்குரார்ப்பணம் செய்தல் (முளையிடல்)

14. ரட்சாபந்தனம் (காப்பு கட்டுதல்)

15. யாகசாலாசுத்தி (யாகசாலை யைக் கோமயம் கொண்டு சுத்தம் செய்தல். பஞ்சகவ்யத்தாலும் புண்ணியாக தீர்த்தத்தாலும் சுத்தமாக்குதல், அலங்கரித்தல், பரிவார கலசங்களை அமைத்தல் முதலியன செய்தல்)

16. கும்பஸ்தாபனம் (கலாகர்ஷணம் செய்வதற்காகக் கும்பம் வைத்து அலங்கரித்துப் பூஜைகள் இயற்றுதல்)

17. கலாகர்ஷணம் (போக, அதிகார, லயாங்கம் என்ற முறையில் கலாகர்ஷணம் அதாவது இறைவனைக் கலசத்தில் எழுந்தருளப் பண்ணுதல்)

18. கலாகர்ஷணம் காலத்தில் விதிக்கப்பட்ட அக்னி கார்யங்கள் செய்தல் (அக்னி காரியம்)

19. மூர்த்தி கும்பஸ்தாபனம் : கலசத்தில் ஆவாஹனம் செய்யப் பெற்ற மூர்த்தி கும்பங்களை யாகசாலைக்கு மேள தாளத்துடன் எடுத்துச்

சென்று யாகசாலை வேதிகையில் எழுந்தருளச் செய்தல்.

20. த்வாரபூஜை நான்கு வாயில் களிலும் விளங்குகின்ற தேவதைகள் மற்றும் திக்தேவதைகள் ஆவரண தேவதைகள் அவர்களின் ஆயுதங்கள் அனைத்தையும் பூஜித்தல்.

21. சூரியபூஜை (த்வாரபூஜை தொடங்குமுன் சூரியருக்குப் பூஜை செய்தல் (சூரியகும்பத்திற்கு)

22. பூதசுத்தி (ஆசாரியர்கள் தங்கள் உடல், ஆத்ம சுத்தியின் பொருட்டு செய்துகொள்ள வேண்டிய பஞ்ச சுதிகளையும் ஆகமோக்த முறைப்படி செய்து கொள்ளவேண்டும்.)

23. விசேஷார்க்கியகரணம் : சிவபிரானைப் பூஜிப்பதற்கான பாத்ய, ஆசமன, அர்கயத்திற்கு என விதிக்கப்பட்ட அர்க்யத்தை பூஜித்துக் கொள்ளல்.

24. பஞ்சகவ்ய சாதனம் (முறைப்படி பஞ்சகவ்யம் செய்து யாக சாலையை அதன் மூலம் தூய்மை செய்தல்) (பசும்பால், தயிர், நெய், கோமூத்ரம், கோமயம்)

25. யாகியாகேஸ்வர பூஜை : (யாகத்துக்கு அதிகாரியான யாகீ யாகேஸ்வரர்களைப் பஞ்சமாவரணம் வரை பூஜித்து ஞானகட்கம் சமர்ப்பித்தல்)

26. வேதிகார்ச்சனை : (வேதிகையில் முன்னர் கும்பம் மூலம் எழுந்தருளச் செய்த மூர்த்திக்குச் சக்தியாதி சக்திபர்யந்தம் என்று ஆகமங்களில் கூறப்படும் விசேஷ பூஜைகளைச் செய்து தூபதீப நிவேதன்கள் அளித்தல்)

27. அக்னிகார்யம் : கும்பத்தில் பூஜித்த மூர்த்தியைக் குண்ட சம்ஸ் காரபூர்வமாய் ஆவாஹித்து பூஜை செய்து பின் ஹோமம் செய்தல். இதற்காக பகல் நேரத்தில் பூதக்கண்ணாடி மூலம் சூரியனின் ஒளி மூலம் அக்நியை உண்டாக்கிப் புஷ்டி செய்து சேகரித்தல் வேண்டும். இதற்கு 'அக்னிசங்கிரஹணம்' என்று பெயராகும்.

28. ஸ்தாலீபாகம் : யாகபூஜைக்கும், ஹோமத்திற்கும் பலியிடுவதற்கும் தேவையான அன்னத்தை யாகசாலையில் அக்னி மூலையில் மந்திரபூர்வமாக சமைத்துக்கொள்ளுதல்.

29. அக்னிவிபஜனம் (பஞ்சாக்னி, நாக்னி முதலாக எத்தனை குண்டங்கள் போடுகிறோமோ அத்தனை குண்டங்களுக்குமாக ஆகம விதிப்படி அக்னியைப் பிரித்துக் கொள்வது. "அக்னி விபஜனம்" எனப்படும். இதை வேதிகை பூஜை முடித்து அக்னி கார்யத்தைப் பிரதான குண்டத்தில் இயற்றிப்பின் சிவாக்நியிலிருந்து அந்தந்த திசைப்படி அக்னியைப் பூஜித்து பிரித்துக் கொள்ள வேண்டும்.

30. பாவனாபிஷேகம் (இதை வேதிகை பூஜையில் பூஜை வேளையில் செய்ய வேண்டும். தனியாக தர்பைக் கூர்சம் கலசத்தில் சாற்றி அதைப்பூஜித்து அதற்கு அபிஷேகாதிகள் செய்வதையே பாவனாபிஷேகம் என்பர். இதை அவசியம் ஒவ்வொரு கால பூஜையிலும் செய்ய வேண்டுமென்க)

31. நியாசங்கள் : வேதிகைபூஜை செய்கையில் இறைவன் மந்திர வடிவின் ஆனபடியால் உரிய மந்திரங்களைச் சொல்லி அங்கங்களைக்

கற்பிப்பது நியாசம் எனப்படும். இவை தண்டபங்கி நியாசம், அஷ்டத்திரம்சத் கலான்யாசம் என்பர். இவை சாதாரணம். சிறப்பாக கலாத்வநியாசம், தத்வாத்வ நியாசம், புவனாத்வநியாசம், வர்ணாத்வநியாசம், பதாத்வ நியாசம், மந்த்ராத்வநியாசம், அந்தர்மாத்ருகாநியாசம், பஹிர்மாத்ருகா நியாசம், தந்திரநியாசம், பஞ்சாக்ஷரநியாசம், ஹம்சநியாசம், புவனநியாசம், பஞ்சாவரணநியாசம் எனப் பலவகை உள்ளன.

அவற்றுள் சிறப்பாக ஷடத்துவநியாசங்களைச் செய்ய வேண்டும். அவை முறையே :

1. கலாத்வன்நியாசம் : இது கலைகள் ஐந்தையும் இறைவனுடைய உருவில் கற்பிப்பதாகும்.

2. தத்வாத்வன்நியாசம் (தத்துவ + அத்வா + நியாசம் என்க) (அத்வா = வழி) (இறைவனின் ருத்ரபாகத்தில் சாந்தியதீத கலையில் பிரம்ம ரந்திரத்தின் மேலேயும், விஷ்ணு பாகத்தில் சாந்திகலையில் தலைக்குக்கீழாகவும் லலாடத்திற்கு (நெற்றிக்கு) மேலாகவும், பிரம்ம பாகத்தில் வித்யா கலையில் தென்பக்கத்திலும் தொடங்கி தத்வ அத்வன் நியாசத்தில் கூறுகிறபடி 96 தத்துவங்களையும் நியாசம் செய்ய வேண்டும்)

3. புவனாத்வன்யாசம் : 224 புவனங்களையும் புவனநியாசப் பகுதியில் உள்ளபடி முறையறிந்து நியாசம் செய்ய வேண்டும்.

4. வர்ணாத்வன்நியாசம் : உயிர் எழுத்து, மெய்யெழுத்து இவைகளை ஆகமவிதிப்படியாக இறைவனின் விக்ரகத்தில் நியாசம் செய்ய வேண்டும், (யாகசாலையில் கும்பத்தில் நியாசம் செய்ய வேண்டும்)

5. பதாத்வன்நியாசம் : வ்யோமவ்யாபிமந்திர பதங்கள் 82யையும் முறையே அறிந்து நியாசம் செய்வது.

6. மந்த்ராத்வன்நியாசம் : பஞ்சம்பிம்மமந்திரம், ஷடங்க மந்திரம் இவைகளை முறைப்படி நியாசம் செய்வது.

இவை ஆறும் ஷடத்வந்நியாசம் எனப்படும். இறைவனின் உருவத்தில் நியாசம் பண்ணவேண்டிய ஆறு வழிமுறைகளாக இவை விளக்குகின்றன.

இவைதவிர மேலும், அந்தர்மாத்ருகான்யாசம், பஹிர்மாத்ரு கான்யாசம் தந்திர நியாசம் (ஆகமம்) பஞ்சாட்சரநியாசம், ஹம்ச நியாசம், புலனன் யாசம், பஞ்சாவரணநியாசம் என கூறப்பட்ட நியாசங்களையும் நியாசம் பண்ணுதல் (பதியவைத்தல்) வேண்டும்.

32. யாககுண்ட பூஜை ஹோமம் பஞ்சகுண்ட, நவகுண்ட பூஜா ஹோமகாலங்களில், அந்தந்த குண்டங்களுக்குண்டான தத்வம், தத்வேஸ்வரர், தத்வேஸ்வரி, மூர்த்தீஸ்வரர், மூர்த்தீஸ்வரி ஆகியோரைப் பூஜித்து ஹோமம் செய்தல் வேண்டும். ஆயுதங்களைம் பூசிக்க வேண்டும்.

33. ஹவிஸ் ஹோமம் செய்தபின்பு விசேஷ ஹோமத்திரவ்யங்களை மந்திரபூர்வமாக ஹோமம் செய்ய வேண்டும். அவை 96 உள்ளன. (தேன், நெய் கலந்த சாதம் 'ஹவிஸ்' எனப்படும்)

34. பூர்ணாஹு¬தி : விசேஷ ஹோமத்ரவ்யஹோமம் முடிந்தபின்பு அஸ்தரமந்திராதிகளை ஹோமம் செய்தபின் பூர்ணாஹு¬தி செய்ய வேண்டும். இவை போலவே எத்தனை காலம் யாக பூஜை உண்டோ அத்தனை வேளைகளிலும் செய்ய வேண்டும்.

35. சங்கியாஹோமம் (இது மிகவும் முக்கியம். மூர்த்திசாந்நித்யம் வேண்டி எந்த மூர்த்திக்கு யாகபூஜை செய்கிறோமோ அந்த மூர்த்திக்கான மூலமந்திரத்தை வேளைக்கு 100,500 அல்லது 100 என்ற கணக்குப்படி (சக்திக்கும், காலத்திற்கும் ஏற்றபடி) நெய்யால் ஹோமம் செய்ய வேண்டுமென்க.)

36. அஷ்டாதசக்கிரியைகள் : (அதாவது புதிய பிம்பமானால் செய்ய வேண்டிய 18 வகையான செயற்பாடுகள் அவை வருமாறு)

1. ஜலாதிவாசம், 2. தான்யாதிவாசம், 3. நயனோன் மீலனம், 4. தசதர்சனம், 5. கிராமப்பிரதட்சிணம், 6. சயனம், 7. பதவின்யாசம், 8. ஆதாரசிலாஸ்தாபனம், 9. ரத்னநியாசம், 10. யந்திரஸ்தாபனம், 11. பிம்பஸ்தாபனம், 12. அஷ்டபந்தனம், 13. பிம்சுத்தி, 14. ரக்ஷா பந்தனம், 15. நாடீசந்தானம், 16. தத்வார்ச்சனை, 17. ஸ்பர்சாஹுதி, 18. கும்பாபிஷேகம் என்பவனவாம்.

37. பேரசலனம் (மூல-விக்ரகங்களை இடம் மாற்றுவதனால் அவற்றை அப்புறப்படுத்துதல்)

38. மஹா பூர்ணாஹுதி (சங்கியா ஹோமம் முடிந்ததும் முடிவாகச் செய்யும் ஆஹுதிக்குப் பூர்ணாஹுதி என்பது பெயர்)

39. அதன்பின் தர்பணாஹுதி செய்ய வேண்டும்.

40. தீபனாஹுதி செய்ய வேண்டும்.

41. அந்தர்பலி

42. பஹிர்பலி

43. அவபிருதயாகம் செய்தல்

44. யாத்ராதானம்

45. கலசங்களை கருவறைக்குக் கொண்டு செல்லல்

46. மஹாகும்பாபிஷேகம் செய்தல்

47. மஹாநிவேதனம் செய்தல்

48. அகண்ட தீபம் ஏற்றல்

49. தசதானம் தருதல்

50. மஹாபிஷேகம் செய்தல்

51. ஆசார்யஉத்சவம்

52. இரவு திருக்கல்யாணம்

53. வீதிஉலா (பஞ்சமூர்த்தி)

54. நாற்பத்தெட்டு நாட்கள் வரை மண்டல அபிஷேகம் உத்சவம் என்பவையாக ஐம்பத்தி ஐந்துக்கும் மேலான செயற்பாடுகள் உள்ளன. அவை யனைத்தையும் விடாமல் முறை அறிந்த சிவாசாரியப் பெருமக்களைக் கொண்டு செய்ய வேண்டும்

உ

# श्रीकण्ठ विजयः
# ஸ்ரீகண்ட விஜயம்

தமிழ் / ஸம்ஸ்க்ருத மாத இதழ் ஃ ஸ்ரீமத் ஸ்ரீகண்ட சிவாசார்ய டிரஸ்ட் வெளியீடு

11, நித்தீஸ்வரம் அக்ரஹாரம்,
காரைக்கோவில்பத்து, காரைக்கால் – 609 605.
✆ : (04368) 226644

*அன்புடையீர்! வணக்கம்.*

*தங்களுக்கு அனைத்து நலன்களும் உண்டாக எல்லாம் வல்ல பரமேச்வரனை பிரார்த்திக்கின்றோம்.*

*தங்களின் அன்பினாலும் ஆதரவினாலும் ஸ்ரீமத் ஸ்ரீகண்ட சிவாசார்ய டிரஸ்ட் மூலம் வெளிவரும் ஸ்ரீகண்ட விஜயம் தமிழ்-ஸம்ஸ்க்ருத மாத இதழ் வளர்ச்சிக்கும், மற்றும் நிரந்தர வைப்புநிதி திட்டத்திற்கும் தங்களின் மேலான நன்கொடைகளை வழங்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.*

**சந்தா விபரம் :**

**ஆண்டு சந்தா ரூ. 35/–**

**மூன்று ஆண்டு சந்தா ரூ. 105/–**

*தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.*

*தங்களின் நன்கொடைகள் மற்றும் சந்தா தொகையை மேனேஜிங் டிரஸ்டி, ஸ்ரீமத் ஸ்ரீகண்ட சிவாசார்ய டிரஸ்ட், காரைக்கால் என்ற பெயருக்கு Cheque / D.D. / M.O. மூலம் மேற்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.*

அன்புடன் சிவத்தொண்டில்

**பால. ஸர்வேச்வர குருக்கள்**

Managing Trustee, SSS Trust

## ஸ்ரீமத் ஸ்ரீகண்ட சிவாசார்ய வேதசிவாகம வித்யாபீடம்

(ஸ்ரீமத் ஸ்ரீகண்ட சிவாசார்ய டிரஸ்டால் நடத்தப்படுகிறது)
11, நித்தீஸ்வரம் அக்ரஹாரம்,
காரைக்கோவில்பத்து, காரைக்கால் – 609 605.
✆ : (04368) 26644

**வித்யார்த்திகளுக்கு உதவுவோம்**
**வேத சிவாகமங்களை போற்றுவோம்**

அன்புடையீர்! வணக்கம்.

தங்களுக்கு அனைத்து நலன்களும் உண்டாக எல்லாம் வல்ல பரமேச்வரனை பிரார்த்திக்கின்றோம்.

தங்களின் அன்பினாலும் ஆதரவினாலும் ஸ்ரீமத் ஸ்ரீகண்ட சிவாசார்ய டிரஸ்ட் மூலம் வித்யா பீடத்தில் தற்சமயம் 30 வித்யார்த்திகள் வேதசிவாகமம் பயின்று வருகிறார்கள். குருகுல முறையில் பயின்று வரும் வித்யாத்திகளின் (மாணவர்களின்) முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு உணவு, தங்கும் இடம் கட்டிடம் கட்டுவதற்கு, பள்ளிப்படிப்புச் செலவிற்கு மற்றும் நிரந்தர வைப்புநிதி திட்டத்திற்கு, தங்களின் மேலான நன்கொடைகளை வழங்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| 1. | ஒரு மாணவனுக்கு ஒரு மாதத்திற்கு பராமரிப்பு | செலவு ரூ. 500 |
| 2. | ஒரு நாள் பால், தயிர் | செலவு ரூ. 200 |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

தங்களின் நன்கொடைகளை ஸ்ரீமத் ஸ்ரீகண்ட சிவாசார்ய டிரஸ்ட், காரைக்கால் என்ற பெயருக்கு Cheque / D.D. / M.O. மூலம் மேற்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

அன்புடன் சிவத்தொண்டில்

**பால. ஸர்வேச்வர குருக்கள்**
மேனேஜிங் டிரஸ்டி, SSS Trust